 Acc.No: 26001.

உ
கணபதிதுணை
திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திரபரிபாலனம்

| தொகுதி உ | விக்கிரமஹூ தைமீ 1941 ஜனவரி | பகுதி ரு |
|---|---|---|

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## சபா நாயகர்

சிவபெருமான் திருநிருத்தம் செய்தருளும் சபைகள் ஐந்து. அவை. திருவாலங்காட்டில் இரத்தினசபையும், தில்லையிற் கனகசபையும், மதுரையில் வெள்ளிச்சபையும், திருநெல்வேலியில் தாமிரசபையும், திருக்குற்றாலத்தில் சித்திரசபையுமாம். இது கந்தபுராணத்துக் கடவுள்வாழ்த்தில் "ஐவகை—பன்றுதொ ருடிய வள்ளல்" எனக் கூறப்பட்டதனால் உணரப்படும்.

சிவபெருமான் ஆன்மாக்கள் தம்மை வழிபட்டுய்யும் பொருட்டு எண்ணில்லாத முக்கிய ஸ்தலங்களைப் பூமியிலே வைத்தருளினார். அவைகளுள்ளே அறுபத்தெட்டு ஸ்தலங்கள் சிறந்தன; அவ் வறுபத்தெட்டுத் தலங்களுள்ளே ஆறு ஸ்தலங்கள் சிறந்தன; அவ்வாறு தலங்களுள்ளே திருவாரூர், காசி, சிதம்பரம் என்னும் மூன்று தலங்கள் சிறந்தன. திருவாரூரிலே பிறந்தவர்களும், காசியிலே இறந்தவர்களும், சிதம்பரத்திலே சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தவர்களும் முத்தி அடைவார்கள்.

திருவாரூரிலே பிறத்தல் முன் செய்த புண்ணியமிகுதியினாலே தானே நேர்படினல்லது செயற்கையால் அடையத்தக்கதன்று. காசியில் இறக்கலாமெனில் பிறர் பொருள் கொள்ளாது பாவத்துக்குப் பயந்து தருமநெறியிலே சம்பாதித்த பொருள் கொண்டு ஜன்மதேசத்தை விடுத்து இறவாது உயிர் தாங்கிச் சென்று காசியை அடைந்து இறக்கும் வரையும் நல்லொழுக்கத்தோடும் அத் திருப்பதியில் இருந்து இறப்பது எளிதில் முடிவதன்று. சிதம்பரத்திலோவெனிற் சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தமாத்திரத்தே முத்தி சித்திக்கும்.

அது குமாரகுருபரசுவாமிகள்

முத்தலந் தலங்களுண் முத்தித் தலமா
வித்தல முடைத்தென விசைத்தனர் சிலரே
அறிஞராங் குரைத்த வுறுதிக் கட்டுரை
உலகியல் வழக்கும் புலனெறி வழக்குமென்
றிருவகை வழக்கினு நிலைபெற் றன்றே.

அவற்றுள்,

ஆரூர்ப் பிறத்த னேர்படி னல்லது
செயற்கையி னெய்து மியற்கைய தன்றே.

அதாஅன்று;

காசியி னிறத்த லோக்கித் தேசம்விட்
டறந்தலைத் தந்த வரும்பொரு டாங்கிப்
பிறன்பொருள் கொள்ளாப் பேரறம் பூண்டு
..............................................
இடைச்சுரத் திறவா தின்னுயிர் தாங்கிக்
கிடைத்தன னாயி னடுத்தநல் லொழுக்கமோ
டுடல்விடு காறுமத் தடாகர் வைகி
முடிவது கடைபோக முடிவதோ வரிதே.

அதனால்,

சிற்றுயிர்க் கிரங்கும் பெரும்பற்றப் புலியூர்
உற்றநின் திருக்கூத் தொருகா லோக்கிப்
பரகதி பெறுவான் றிருமுன் பெய்தப்
பெற்றன னளியனேன் பற்றில னாயினும்
நின்பதம் வழக்குறு நிமலவென் றனக்கே.

எனக் கூறியருளியவாற்றுன் உணரப்படும்.

இன்னும் தக்ஷிணதேசத்தார் ஒளிநிறைந்த கனகசபையை நீங்கி, முத்தியைத் தேடிக் காசியிலே சென்றால் அங்கே அது கிடைப்பதில்லை. உத்தரதேசத்தார் சிதம்பரம் முத்தி தரும் என்று வந்துசேர்ந்தால் இது பாசநீங்க முத்தியைக் கொடுக்கும். ஆதலினாலே, சிதம்பரமே எல்லாத் தலங்களிலும் சிறந்தது.

கோயிற்புராணம்

தேசமார் மன்ற கன்று சிவகதி தேடி யுற்றாற்
காசியி லில்லை தில்லை கதிதரு மென்ற ணைந்தாற்
பாசம தகல முத்தி பணித்திடு மென்றா ரென்றா
லீசன தருளி ரக்கத் தெல்லையார் சொல்லுவாரே.

பிண்டமும் அண்டமும் தம்முள் ஒத்தன. பிண்டமாகிய சரீரத்தில் இடப்பக்க நாடியாகிய இடைக்கும் வலப்பக்க நாடியாகிய பிங்கலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனைநாடியும், பிரமாண்டத்தில் உள்ள இப் பரதகண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவில் உள்ள தில்லையும் சிவபெருமான் ஆனந்தநிருத்தம் செய்யும் தானமாம்.

வலங்கைமான் மழுவோன் போற்றும் வாளர வரசை நோக்கி
யலைந்திடும் பிண்ட மண்ட மவைசம மாத லாலே
இலங்கைநே ரிடைபோ மற்றை யிலங்குபிங் கலையா நாடி
நலங்கிள ரிமைய நேர்போ நடுவுபோஞ் சுழுனை நாடி.

என்னும் கோயிற்புராணத்துப் பதஞ்சலிச்சருக்கத்து ௭0-ம் செய்யுளானும் அதற்கடுத்த செய்யுளானும் உணரப்படும்.

சாந்தோக்கியம் என்னும் உபநிஷதத்திலே பிரமபுரத்தின் உள்ள தகரமாகிய புண்டரீகவீட்டினுள்ளே இருக்கும் அதிசூக்குமசித்தை அறிதல் வேண்டுமென்று தகரவித்தை சொல்லப்பட்டது. இங்கே பிரமபுரம் என்றது இச் சரீரத்தையும், புண்டரீகவீடென்றது இருதயகமலத்தையும், ஆகாசமென்றது பராசத்தியையும், அதிசூக்கும சித்தென்றது பரப்பிரமமாகிய சிவத்தையுமென்றறிக. புறத்தும் இப்படியே பிருதிவி முதற் சிவதத்துவமீறாய முப்பத்தாறு தத்துவங்கள் அடங்கிநின்ற பிரமாண்டம் பிரமபுரம் எனவும், பிரமாண்டத்தினுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீக வீடு எனவும், தில்லைவனத்திலிருக்கும் ஆகாயம் பராசத்தியாகிய திருச்சிற்றம்பலம் எனவும், அத் திருச்சிற்றம்பலத்திலே திருநிருத்தம் செய்யும் பரப்பிரமசிவம்

அதிசூக்கும சித்தெனவும் சொல்லப்படும். இவ்வாகாசம் பூதாகாசம் போற் சடமாகாது சித்தேயாம். ஆதலால், சிதம்பரம் எனப்படும். இச் சிதம்பரம் எக்காலமும் நீக்கமின்றி விளங்குந் தானமாதலால் இத் தில்லையும் சிதம்பரம் எனப் பெயர் பெறும்.

சிவபெருமான் அனவரததாண்டவம் செய்தருளும் அம்பலத்தின் பெயர்களாவன: மன்றும், அமலமும், சத்தும், உம்பரும், இரண்யமயகோசமும், மகத்தும், தனியும், புண்டரிகமும், குகையும், ககனமும், சுத்தமும், பரமும், அற்புதமும், மெய்பதமும், சுழுமுனைவழி ஞானசுகோதயமும், சிதம்பரமும், முத்தியும், பரப்பிரமமும், சபையும், சத்தியும், சிவாலயமுமாம் எனக் கோயிற்புராணம் வியாக்கிரபாதச்சருக்கம் கூறும்.

மன்று—சருவான்மாக்கட்கும் பொதுவாய்ச் சம்சாரவழக்கறுக்கும் அம்பலம்.

அமலம்—இயல்பாகவே பாசத்தினீங்கி நிற்பது.

சத்து—காலத்தால் வரையறுக்கப்படாது உள்ளது.

உம்பர்—மேலாகிய பொருள்.

இரண்மயகோசம்—பொன்மயமாகிய கோசம்.

மகத்து—பெரிது.

தனி—சுத்தமாகிய கேவலம்.

புண்டரிகம்—பூமிக்கு இருதயகமலம்.

குகை—யாவர்க்கும் புகலிடம்.

ககனம்—நித்தமும் வியாபகமும் சுத்தமும் ஆகிய பரமாகாசம்.

சுத்தம்—தூய்து.

பரம்—எல்லாப் பொருட்கும் மேலது.

அற்புதம்—காணுந்தோறும் காணுந்தோறும் புதிதுபுதிதாயிருப்பது.

மெய்ப்பதம்—சத்தியத்துக்கு இடம்.

சுழுமுனைவழி ஞானசுகோதயம்—சுழுமுனைமார்க்கத்திலே ஞானானந்தம் உதிக்கும் இடம்.

சிதம்பரம்—பூதாகாசம் போற் சடமாகாது சித்தேயாய் உள்ளது.

முத்தி—பாசநீக்கத்தானம்.

பரப்பிரமம்—மகாமாயைக்கு மேலானது.

சபை—எக்காலத்தும் எல்லாப் பொருளினும் விளங்குவது.

சத்தி—சிவசத்தி வடிவானது.

சிவாலயம்—சிவத்துக்கு ஆலயம். சிதம்பரம் சகல சேதனு சேதனப் பிரபஞ்சம் தோன்றிநின் றொடுங்குமிடனும் முத்தித் தானமுமாதலினாலே, எல்லாத் திருத்தளிகட்கும் மேலாகக் கோயில் என வழங்கப்படுவது.

சிவபெருமான் பிண்டம், அண்டம் இரண்டினும் உபாசிக் கற்பாலர். இதனைக் கைவல்லியோபநிடதத்தில் "இருதய புண்டரீகத்தைத் துகளற்ற சுத்தமாகக் கருதி அதன் மத்தி யிலே தெளிவுடையமாய், சோகமில்லாதவராய், எண்ணப்படாத வராய், வெளிப்படாதவராய், அனந்தரூபராய், சிவனாய், பிரசாந் தராய், அமிர்தராய், பிரமயோனியாயுள்ளாரை... தியானித்து" என்றற்றொடக்கத்தனவாகக் கூறப்பட்டது.

சங்கமமாகிய பிண்டமும் தாவரமாகிய அண்டமும் சமமாத லால் பிண்டமாகிய சரீரத்தில் இடைநாடிக்கும் பிங்கலைநாடிக் கும் நடுவிலுள்ள சுழுமுனைநாடியினும், பிரமாண்டத்திலுள்ள இப் பாதகண்டத்தில் இலங்கைக்கு நேரே போகும் இடைநாடிக் கும் இமயமலைக்கு நேரே போகும் பிங்கலைநாடிக்கும் நடுவிலுள்ள தில்லைவனத்திற்கு நேரே போய்க் கூடும் சுழுமுனை நாடியிலிருக் கும் மூல லிங்கத்திற்குத் தெற்கேயுள்ள கனகசபையினும் நாம் அனவரததாண்டவம் செய்தருளுவோம்; அச் சபை ஞானுகாச மாகிய மெய்ப்பொருளாயிருத்தலால், மாயைப் பொருள்களைப் போல் அழியாது எக்காலமும் நிலைபெற்றிருக்கும். புண்ணியங் களைச் செய்த ஆன்மாக்களுள்ளே நாடுதற்கரிய ஞானக்கண்ணைப் பெற்றவர்களே சிதம்பரத்தை மெய்யன்போடு தரிசிப்பர். சகள மும் நிஷ்களமுமாகிய இரண்டும் நமக்குப் பற்றுக்கோடாகிய வடிவங்களாம். உருவத்திருமேனியானது அன்பர்களது பாச மாகிய விலங்கை அறுக்கும்படி சத்தி உபாதானமாக அவர்கள் எதிரே விளங்குவது. அருவத்திருமேனியானது ஞானமாய்க் கண்டிக்கப்படாததாய் இருப்பது. இவ்விரண்டையும கடந்து நின்ற இயற்கை வடிவம் சோதிமயமாகிய ஞானரூபமேயாம். அது பரமாகிய சுத்தமாயையின் மேலானது. சிருட்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அநுக்கிரகமாகிய பஞ்சகிருத்தியங்க ளுமே நமக்கு நிருத்தமாகும் என்று பதஞ்சலிமுனிவருக்குச்

சிவபெருமான் உபதேசித்த பொருளையுடையதாக உமாபதி சிவாசாரியர் கோயிற்புராணத்திற் கூறியருளினர்.

பரமசிவன் பஞ்சாக்ஷரத்தைத் திருமேனியாகக் கொண்டு பராசத்தியாகிய திருவம்பலத்தில் நின்று உமாதேவியார் காண வியாக்கிரபாதமுனிவர், பதஞ்சலிமுனிவர் இருவரும் மெய்யுணர் வாற்றொழ நடித்தருளுவர்.

உடுக்கையேந்திய திருக்கரம் சிருட்டியையும், அமைத்த திருக்கரம் ஆன்மரட்சையையும், அக்கினி யேந்திய திருக்கரம் மலசங்காரத்தையும், ஊன்றிய திருப்பாதம் பிரபஞ்சத்தை மறைக்கும் திரோபவத்தையும், தூக்கிய திருப்பாதம் அநுக்கிரகமுத்தியையும் குறிக்கும். உடுக்கை யேந்திய திருக்கரத்தி னாலே மாயாமலத்தை நீக்கி, அக்கினி யேந்திய திருக்கரத்தினாலே கன்மமலத்தைச் சுட்டு, ஊன்றிய ஸ்ரீபாதத்தினாலே ஆணவமல மேலிடாமலழுத்தி, தூக்கிய திருவடியினாலே அருளே உடம்பாக நிறுத்தி, அமைத்த திருக்கரத்தினாலே ஆனந்தவெள்ளத்திலே ஆன்மாவை அழுத்துதலே எமது தலைவர் நிருத்தம் செய்கின்ற முறைமையாம் என்று உண்மைவிளக்கத்திலும், "ஐந்து நலமிகு தொழில்களோடு நாடக நடிப்பனுதன்" எனச் சிவஞானசித்தியா ரிலும், "மன்றுணர்ந்து பிறவி வழக்கறுக்க—நின்ற நிருத்தநிலை போற்றி" என்று போற்றிப்பஃறொடையிலும், "நீங்க வரும் பவத்தொடர்ச்சி நீங்கமன்றுணின்றிமையோர் துதிசெய்ய நிருத் தம் செய்யும்" என்று சிவப்பிரகாசத்திலும் செப்பியவாற்றுற் காண்க.

சிவத்தைக் காட்டிக் காணுதலின் எய்தும் பரமானந்த சிவபோகத்தை அபக்குவர்களாகிய ஆன்மாக்கள் அனுபவிக்க இயலார் என்றோர்ந்தே எங்கள் உலகமாதாவாகிய சிவகாமித் தாயார் பஞ்சப் பொறிகளையும் ஒருவழிப்படுத்தும் சிதம்பரத் தில் எக்காலமும் ஆனந்தநடேசரது நடனத்தைப் பார்த்துக் கொண்டு நிற்பாராயினர். இது சிறுபாலரின் பிணிநீக்கத்தின் பொருட்டுத் தாயார் மருந்துண்பது போலாம். அவ்வுண்மை யைக் "குயிலாய மென்மொழியாள் குளிர்ந்து நோக்கக் கூத்தாட வல்ல குளகர் போலும்" (திருநாவுக்கரசர்)

என்பதனாலும்,

"மணிமன்று ளாடல்காணு மன்னையருட்
பாதமலர் சென்னி வைப்பாம்" (சிவப்பிரகாசம்)

என்பதனாலும்,

"நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
வையமீன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூற் கொண்ட வையரித் தடங்கட்
டிருமாண் சாயற் றிருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த" (சிதம்பரமும்மணிக்கோவை)

என்பதனாலும்,

தண்டளிர்ச் சோலைத் தில்லைத் தபனிய மன்றி லென்றுந்
தொண்டையங் கனிவாய் மாது தொழச்சுராட் புருட னுள்ளத்
தண்டரு மதிக்க லாற்று அற்புதத் தனிக்கூத் தாடல்
கண்டனன் கசிவா லுள்ளங் களிப்புற வணங்கிப் போனான்.
(கந்தபுராணம்)

என்பதனாலும் அறியப்படும்.

வியாக்கிரபாதமுனிவர், பதஞ்சலிமுனிவர், உபமன்னியு முனிவர், தில்லைவாழந்தணர், வியாசமுனிவர், சுகமுனிவர், சௌனகமுனிவர், சைமினிமுனிவர், சூதமுனிவர் முதலாயினோர் எண்ணிறந்தோர்கள் சிதம்பரத்திலே நியமமாகச் சிவகங்கையில் ஸ்நானம் செய்து நடேசப்பெருமானுடைய ஆனந்தநிருத்தத்தைத் தரிசித்து வணங்கித் துதித்துச் சிவானந்தப் பெருவாழ்வு அடைந்தார்கள். உபமன்னியுமுனிவர் வியாக்கிரபாதமுனிவருடைய குமாரர்; சிவபெருமானால் அழைக்கப்பட்ட திருப்பாற் கடலை உண்டவர்; கிருஷ்ணருக்குச் சிவதீட்சை செய்து சிவ பூஜை எழுந்தருளிக்கொடுத்த பரமாசாரியர். சைமினிமுனிவர் நடேசப்பெருமானை வேதபாதஸ்தவத்தினாலே துதித்தவர். வேதபாதஸ்தவமாவது முதன் மூன்று பாதமும் தமது வாக்காகவும் நான்காம் பாதம் வேதமாகவும் செய்யப்பட்ட ஸ்தோத்திரம். ஸ்தவம்—ஸ்தோத்திரம்.

சயமலி சாம வேதத் தலைவரி லொருவ னான
செயமினி முனிவ னண்ணித் திருநடந் தொழுது வாழ்ந்து
வியன்மலர்ப் பாத மன்பால் வேதபா தத்த வத்தா
னயமிகப் பரவி யின்ப நண்ணினா னெண்ண மார.

விட்டுணுமூர்த்தியானவர் தில்லையிலுள்ள கனகசபையைத் தொழுது, பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சி அறிவு செயலிழந்தவிடத்து உளதாம் அன்புமீதூர்ந்து, அதுகாரணமாகக் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பொழியச் சிவபெருமானது அகண்டாகார நித்தவியாபக எல்லையைத் தலைப்பட்டு அதிலமுந்தி நான்கு மாசம் எழுந்திலர். விட்டுணு இங்ஙனம் பரமானந்தவசமாய் ஆதிமத்தியாந்தரகிதராகிய சிவபெருமானது பரமானந்தசாகரமாகிய திருவடிக்கீழ் அடங்கிநின்று பின் அச்சிவபெருமானது ஆஞ்ஞையினால் நின்மல துரியாதீத சிவபோக நிலையை அடைந்து, அவரது ஆன்மாவானது மீண்டு சகலாவத்தையை அடையச் சரீர உணர்வுக்குரிய தத்துவங்களெல்லாம் முறைமுறையே அவதரித்து வந்து கூடக் கண்துயின்றவன் எழுந்தாற்போல எழுந்து சிற்சபேசரது திருவடித்தாமரையைத் தொழுது வணங்கினர் என்று கந்தபுராணம் கூறுகின்றது.

நடராசப்பெருமானது திருவுருவை விராட்புருடனாகிய பிரமாவினது பிரமாண்ட சரீரத்தின் இருதயகமலமாகிய தில்லையிலே நாடோறும் விதிப்படி அன்போடு தரிசித்துக்கொண்டு வந்தவர் அந்நடேசப்பெருமானைத் தமது பிண்டசரீரத்தினது இருதயகமலமாகிய தகரத்திலே தியானித்துத் தரிசித்துப் பாச நீங்கி முத்தி அடைவர். இதுவே தகரவித்தை. இது சாந்தோக்கியம், பிருகதாரணியம், கைவல்லியம் முதலிய உபநிடதங்களில் கூறப்பட்டுள்ளது.

சிதம்பர நிருத்தைத் தரிசித்தலால் வரும் ஆனந்தம்,

புளிக்கண்ட வர்க்குப் புனலூறு மாபோற்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாந்
துளிக்குங்கண் ணீருடன் சோருநெஞ் சத்திரு
ளொளிக்கு மானந்த வமுதூறு முள்ளத்தே.

என்னுந் திருமந்திரத்தானுணர்க.

சபாநாயகர் மிக்க பேரொளியும், திருப்புன்முறுவலையுடைய ஒரு திருமுகமும், மூன்று திருக்கண்ணும், கங்கையையும், பிறையையும் கொன்றைமாலையையுந் தாங்கிப் பின்றூங்காநின்ற திருச்சடையும், சங்கக்குண்டலம் பொருந்திய வலத்திருச்செவியும்,

திருத்தோடு பொருந்திய இடத்திருச்செவியும், திருநீலகண்டமும், டமருகம் பொருந்திய திருக்கரம் அபயம் என்னும் வலத்திருக்கரம் இரண்டும், அக்கினியகல் பொருந்திய திருக்கரம் டோளகரம் என்னும் இடத்திருக்கரம் இரண்டும், புலித்தோலை ஆடையாகக் கொண்டு கச்சையுடைத்தாய் செறிப்புப் பொருந்தி விளங்கும் திருவரையும், முயலகன்மேல் ஊன்றிய வலத்திருப்பாதமும், தூக்கி வளைத்த இடத்திருப்பாதமும் உடையர்.

சிவகாமி அம்மையார் பச்சைநிறத் திருமேனியும் திருக்கழுத்திலே திருமங்கலசூத்திரமும், செங்கழுநீர் பிடித்த வலத்திருக்கையும், கடிக்கீழ்த் தொங்கவிட்ட இடத்திருக்கையும் மிக ஒடுங்கிய நிலையும் உடையர்.

நடேசர் தியானம்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

சிவகாமசுந்தரி தியானம்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

———

# திருவெம்பாவை

[கருணைநகர், வெற்றிகாடு

சிவஸ்ரீ சு. சுவாமிநாத சிவாசாரியார் அவர்கள் எழுதியது.]

திருநெறித் தலைவராகிய ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகள் தமக்கு ஆசாரிய மூர்த்தமா யெழுந்தருளிய பரமசிவம் அருளிச்செய்தபடி திருவுத்தரகோசமங்கையிற் சேர்ந்து, சிவாலயத்துட் சென்று பணிந்து, சுவாமி குருமூர்த்தமாய்த் தரிசனங்கொடுக்கத் தரிசித்து. விடைபெற்றுக்கொண்டு, திருவிடைமருதூர் முதலிய தலங்களுக்குப் போய், ஆங்காங்கு சிவதரிசனஞ் செய்துகொண்டு, திருவண்ணாமலைக்கு எழுந்தருளி ஸ்ரீ அருணசலேசுரர் ஆசாரிய மூர்த்தமாகத் தரிசனங் கொடுக்கத் தரிசித்து, அங்கு வசித்துக்கொண்டிருக்கும்போது, மார்கழிமீ திருவாதிரைக்கு முன் 10 நாளளவும் விடியற் காலத்தில் அங்கிருக்கும் மாதர்களெல்லோரும் ஒருவர் வீட்டுக் கொருவர் போய் 'தோழியே' நமதாண்டவனாகிய பரமசிவனைத் தோத்திரஞ்செய்யக் கேட்டும் இன்னமும் நித்திரை செய்யலாமா? உன் காது வலியகாதா? எழுந்திரு; அருணசலேஸ்வரரைத் தரிசிக்கலாம்" என்று சொல்லி எழுப்பி, ஸ்நானதி நியமங்களை முடித்துக்கொண்டு, சந்நிதானத்துக்கு வரும் அன்பினைக் கண்டு, உள்ளத்தில் ஆனந்தம் ஜனிக்க அவர்கள் பேசிக் கொண்டதுபோல், பிரபஞ்ச வநுக்கிரக காரியமாகச் சதாசிவ மூர்த்தி திருவருளால் மகேஸ்வர தத்துவத்திலே சத்தி மண்டலத்திலிருந்த மனேன்மனி, சர்வபூததமனி, பலப்பிரதமனி, பலவிகரணி, கலவிகரணி, காளி, இரவுத்திரி, சேட்டை, வாமை ஆகிய நவசத்திகளும் ஒருவரையொருவர் முறையே யெழுப்பிக்க, அதனல் விசுவகாரியம் நடந்துவருவதையே திருவெம்பாவையாக ஓதியருளினர்.

ஆதலால் மார்கழிமீ ஆருத்ராவுக்கு முன்னதாகச் சிவாலயங்களிலெல்லாம் மாணிக்கவாசகசுவாமிகளுக்கு உற்சவம் நடப்பதும், திருவெம்பாவை யோதுவதுமாக முன்னோரால் ஏற்பாடுசெய்யப்பட்டு வழங்கிவருகின்றன. இதன் சிறப்பைக் குறித்தே மேலையோர் அப் பத்து நாட்களிலும் தேவாரமோதாது இதனையே யோதலாயினர்.

# ஆருத்ராதரிசனம்

## நடேசர் தரிசனம்

"சித்திரையி லோணமுதற் சிராணி யுத்தரமாம்
சுத்ததனு வாதிரையுஞ் சார்வாகும்—பத்திவளர்
மாசி பரிகன்னி மருவு சதுர்த்தசிமன்
நீசரபி ஷேகதின மாம்."

சித்திரைமீ திருவோணம், ஆனிமீ உத்தரம், மார்கழிமீ திருவாதிரை, மாசிமீ, ஆவணிமீ, புரட்டாதிமீ பூர்வபட்ச சதுர்த்தசிகள் ஆகிய இவ்வாறும் நடராஜமூர்த்தியின் அபிஷேக தினங்களாம்.

நமக்கு ஒரு வருடம் தேவர்களுக்கு ஒரு நாளாகின்ற படியால், இவ் வாறபிஷேக நாட்களும் சிவபெருமானுக்குத் தேவர்களால் பிரதிதினம் செய்யப்படுகின்ற ஆறுகால பூஜைகளாகும். எப்படியென்றால், மார்கழிமீ பிராதக்காலம் 25 நாழிகை முதல் 30 நாழிகைக்குள் செய்யும் பூஜை பஞ்ச பஞ்ச வுஷத்கால பூஜைபாகும். மாசிமீ உதபாதி 10 நாழிகைகளுக்குள் செய்யும் பூஜை காலசந்தி பூஜைபாகும். சித்திரைமீ மத்தியானம் 20 நாழிகைக்குள் செய்யும் பூஜை உச்சிக்கால பூஜைபாகும். ஆனிமீ சாயங்காலம் 30 நாழிகைக்குள் செய்யும் பூஜை பிரதோஷபூஜையாகும். ஆவணிமீ இராத்திரி $7\frac{1}{2}$ நாழிகைக்குள் செய்யும் பூஜை மாலை சந்தி பூசையாம். புரட்டாதிமீ இராத்திரி $11\frac{1}{2}$ நாழிகைக்குள் செய்யும் பூஜை அர்த்தஜாம பூஜைபாம். ஆகலான், மார்கழிமீ திருவாதிரை அபிஷேகம் பஞ்சபஞ்ச வுஷத்கால திருமஞ்சனமாகின்றது. நடராஜமூர்த்திக்குச் செய்யும் அபிஷேகாதிகள், ஆன்மாக்கள் நாடோறும் ஈடேறும் பொருட்டுச் செய்யாமற் செய்து கொண்டிருக்கும் பஞ்சகிருத்தியங்களுக் கறிகுறியேயாகின்றன. எப்படியெனின், நடராஜமூர்த்தி சிற்சபையை விட்டெழுந்தருளுவது சிருட்டி; இரக்ஷாபந்தனந் தரிப்பது ஸ்திதி; கிருஷ்ண கந்தந் தரிப்பது சங்காரமாம்; வெள்ளை சாத்துவது திரோபவம்; தரிசனம் கொடுப்பது அனுக்கிரகம் என்றும், சுவாமி அசுரரைச் சங்கரித்தபோது அவர்களுடைய சரீரம் கரிய பஸ்பமானதால் அதைத் திலதமாக்கித் தரித்துக்கொண்டது கிருஷ்ணகந்தம் (கறுப்புச்சாந்து) என்றும், அது தணியும்பொருட்டுத் தேவர்கள் திருமேனியைச் சந்தனம், வெள்ளைப்புஷ்பம், வெள்ளை வஸ்திர முதலியவைகளால் மறைத்தார்கள் என்றும் சொல்வர்.

---

# சிவசின்னம்

[சுவாமிமலை, S. R. தண்டபாணிக்குருக்கள் அவர்கள் எழுதியது.]

சிவமந்திரங்கொண்டு விதிப்படி ஆக்கப்பட்ட கோமயமாகிய விபூதியும், அங்ஙனமே பிரதிட்டை செய்யப்பட்ட உருத்திராக்ஷமும் சிவசின்னங்களாம்.

இவை முறையே பசுமல நீக்கத்துச் சிவத்துவக்குறியாயும், சிவபெருமானது திருநேத்திரத்திலே தோன்றும் திருவருட் குறியாயும் இருக்கின்றன. இவைகள் தம்மைத் தரித்தோருடைய மனம் வாக்குக் காயம் மூன்றையும் இறைபணியிலே செலுத்துவித்து, அவர்களைச் சிவனடியாரோடு சேர்க்கின்றன. அவர்களைக் காண்பவரியாரையும் சிவனுக்கு அடிமைகள் என்று தெளிந்து, அவர்கள்மேற் பத்திபண்ணுதற்கும் ஏதுவாயிருக்கின்றன. ஆதலினாலேயே இவற்றைச் சிவசின்னங்கள் என்று நமது நூல்கள் கூறுகின்றன.

சைவர்களாலே அணிபத்தக்க பூஷணங்கள் விபூதி, ருத்திராக்ஷங்களேயாம் என்பது "முனிவர் அணிவது நீறு" "பேணியணிபவர்க்கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு" "பூசவினியது நீறு" எனத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும், "கண்டியிற்பட்ட கழுத்துடையீர்" எனத் திருநாவுக்கரசு நாயனாரும் கூறியவாற்றான் உணரப்படும். கண்டி - உருத்திராக்ஷம். ஔவைப்பிராட்டியாரும் "நீறில்லா நெற்றிபாழ்" என்று அருளிச்செய்தார். பொன், வெள்ளி, இரத்தினம் ஆதியவற்றாற் செய்யப்பட்ட லௌகிக ஆபரணங்கள் அற்பபலனையும் பெருந் தீமையையும் பயப்பன. விபூதி, உருத்திராக்ஷங்களாகிய வைதிக பூஷணங்கள் தம்மை அணிந்தவர்களுக்கு எப்பொழுதும் இம்மை மறுமைப் பயன்களையும், முத்தியையும் பாலிக்கின்றன.

இத்துணைப் பெருமைவாய்ந்த சிவசின்னங்களை அணிய வேண்டிய முறைப்படி விதிவிலக்கறிந்து அணிந்துகொள்வது விசேஷம். இவற்றின் இலக்ஷணங்கள் மகாத்மியங்கள் பயன்கள் எல்லாம் சிவாகமம், வேதம், தமிழ்வேதம், புராணம் முதலிய நூல்களால் அறியத்தக்கனவாயிருக்கின்றன.

ஒருவனையே தனக்கு நாயகனாகக்கொண்ட பதிவிரதையானவள் தனது நாயகனாற் கொடுக்கப்பட்ட திருமங்கலியம் முதலியவற்றைத் தனது கற்புநிலைக்குச் சாதகமாகத் தரித்

தொழுகுவள். அதுபோலச் சிவபெருமானையே பசுபதி எனக் கொண்டொழுகும் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அன்பு நிலைக்கு அடையாளமாகத் தரிக்கத்தக்கன சிவசின்னங்களாகிய விபூதியும் உருத்திராக்ஷமுமேயாகும். எவள் திருமங்கலியம் முதலிய அடையாளங்களைத் தரித்தற்குக் கூசுகிறாளோ அவள் பதிவிரதை எனப்படாள். அதுபோல எவ்வணிகளைத் தரியாதிருந்தாலும் சிவசின்னங்களைச் சிவனடியார்கள் எப்பொழுதும் தரித்தல்வேண்டும். ஆதலால் சிவசிவசின்னம் யாவர்க்கும் இன்றியமையாததேயாகும்.

---

## சிவாசார்யகுழாமும் வித்தையும்

[திருப்பத்தூர்: சிவஸ்ரீ சிவசுப்ரமண்யக்குருக்கள்.]

விஞ்யா ஞாதி விநயம் விநயாத் யாதி பாத்ரதாம்।
பாத்ராத் தநமாப்நோதி தநாத் தர்மம் ததஸ்ஸுகம்॥

உலகத்திலே மனிதவர்க்கத்திற்கு வித்தை அவசியம் வேண்டப்படுவதாக இருக்கின்றது. மேலே கூறிய சுலோகத்தின் பிரகாரம் படிப்பானது முதன்மையாகப் பெரியோர்களைப் பார்த்தமாத்திரத்தில் வணங்கும்படி செய்து, அகங்காரமற்ற புத்தியைக் கொடுக்கின்றது. அவ்வணக்கம் எவனுக்கு ஏற்படுகின்றதோ, அவன் பெரியோர்களதும் தார்மிக அரசர்களதும் அன்பிற்குரியவனுகிறான். பெரியோர்களுக்கும் அரசர்களுக்கும் மித்திரனுக ஆகிவிட்டால் பெரியோர்களால் ஆசீர்வாதங்களும் அரசர்களால் யதேஷ்டமான ஐசுவரியங்களும் அவனுக்கு வருகின்றன. அவன் கர்ணன் முதலிய கொடையாளிகளின் சரித்திரத்தை வாசித்து, அதனுல் தருமத்தை அறிந்தவனுக இருப்பதால், தனக்குக் கிடைத்த ஐசுவரியங்களைத் தன்னளவிலேயே உபயோகப்படுத்தாமல், தெய்வம், பிராமணர், ஏழைகள் பொதுஜனங்கள் என்னுமிவர்களின் பொருட்டும் பயன்படுத்துகின்றான். அதனுல் அவனிடம் தருமம் நிலைபெறுகின்றது. “தர்மம் தலைகாக்கும்” என்ற வாக்கியத்தின்படி தர்மம் அந்தப் புருஷனைச் சகலவிதமான அபாயங்களினின்றும் காப்பாற்றும். தருமம் தார்மிகர்களைத் துக்கமற்றிருக்கச்செய்யும். அதாவது சுகமுறச்செய்யும்; தருமம் இந்தலோக சுகத்தோடு பர

லோக சுகத்தையு மளிக்கும். இவைதாம் சம்பூரணமாகப் படித்தவனுக்கு வித்தையாலேற்படும் பிரயோஜனங்கள். இவ்வித வித்தை மனிதனுக்கு அவசியமென்பதைப் பர்த்ருஹரி என்னும் கவிகுலதிலகம் அடியிற்கண்ட சம்ஸ்கிருதச் செய்யுள் மூலம் விளக்குகிருர்:—

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌨𑌾𑌮 𑌨𑌰𑌸𑍍𑌯 𑌰𑍂𑌪𑌮𑌧𑌿𑌕𑌂 𑌪𑍍𑌰𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌗𑍁𑌪𑍍𑌤𑌂 𑌧𑌨𑌂
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌭𑍋𑌗𑌕𑌰𑍀 𑌯𑌶𑌃𑌸𑍁𑌖𑌕𑌰𑍀 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌗𑍁𑌰𑍂𑌣𑌾𑌂 𑌗𑍁𑌰𑍁𑌃
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌬𑌨𑍍𑌧𑍁𑌜𑌨𑍋 𑌵𑌿𑌦𑍇𑌶𑌗𑌮𑌨𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌪𑌰𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾 ।
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌰𑌾𑌜𑌸𑍁 𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌹𑌿 𑌧𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌹𑍀𑌨𑌃 𑌪𑌶𑍁𑌃 ॥

ரூபமென்பது, கடுக்கன் முத்துமாலை காற்சிலம்பு தோள் வளையம் என்னும் நால்வகை ஆபரணங்களை அணியாமல், இவைகளை அணிந்தாலேற்படும் அழகைப்போலிருந்தால் அந்தவித அழகை ரூபமென்பார்கள். அஃதாவது, இயற்கை அழகு என்பதாம். வித்தைதான் மானிடர்க்கு மூலதனம். புமானுக்கு மாலை சந்தனம் முதலான அனுபவிக்கத்தக்க வஸ்துக்களை அடைவதற்கு முக்கிய காரணம் வித்தையே. புருஷனுக்குப் படிப்பொன்றே கீர்த்தியையும் சுகத்தையும் அளிக்கக்கூடியது. வித்தையே ஆசாரியர்களுக்கெல்லாம் ஆசாரியன். அன்னிய நாடுகளுக்கு மித்திரனைப்போல் உதவிபுரிப்பதும், குலதெய்வத்தைப்போல் இகலோக பரலோக சுகத்தை உண்டுபண்ணுவதும் அதுவே. வித்தையையன்றோ வித்துவான்களான அரசர்கள் கொண்டாடுவார்கள். பணத்தைப் பூஜிக்கமாட்டார்கள். (இதனுற் பணத்தைப் பூஜிப்பவர்கள் எப்படிப்பட்டவரெனக் கூருதே போதருர்.) இவ்வித வித்தையற்றவனைப் பகுத்தறிவற்றவனை மிருகமென்றே கூறவேண்டும்.

மனிதனுக்கு வித்தைதான் அலங்காரமென்பதை அந்தக் கவியே,

𑌕𑍇𑌯𑍂𑌰𑌾𑌣𑌿 𑌨 𑌭𑍂𑌷𑌯𑌨𑍍𑌤𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌹𑌾𑌰𑌾 𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑍋𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌾
𑌨 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌨 𑌵𑌿𑌲𑍇𑌪𑌨𑌂 𑌨 𑌕𑍁𑌸𑍁𑌮𑌂 𑌨𑌾𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑌾 𑌮𑍂𑌰𑍍𑌧𑌜𑌾𑌃 ।
𑌵𑌾𑌣𑍍𑌯𑍇𑌕𑌾 𑌸𑌮𑌲𑌙𑍍𑌕𑌰𑍋𑌤𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌯𑌾 𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌾 𑌧𑌾𑌰𑍍𑌯𑌤𑍇
𑌕𑍍𑌷𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌖𑌲𑍁 𑌭𑍂𑌷𑌣𑌾𑌨𑌿 𑌸𑌤𑌤𑌂 𑌵𑌾𑌗𑍍𑌭𑍂𑌷𑌣𑌂 𑌭𑍂𑌷𑌣𑌂 ।

மனிதனைத் தோள்வளையங்களோ, சந்திரன்போற் பிரகாசிக்கும் முத்துமாலைகளோ, ஸ்நானமோ, சந்தனப்பூச்சோ, புஷ்பமோ,

வாசனை எண்ணெய் புஷ்பம் முதலிய வஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்ட கேசங்களோ அழகுறச் செய்வன அல்ல; பின்போ வியாகரணம் முதலிய சாஸ்திரங்களால் சிறப்புற்ற வித்தையன்றோ மனிதனைச் சோபிக்கச் செய்கின்றது; தோள்வளையம் முதலான அழியக்கூடிய வஸ்துக்கள் ஆபரணங்கள் அல்ல; என்றுமழியாத சம்ஸ்கிருதச் சொல்லலங்காரந்தான் மனிதனுக்கு அலங்காரம் எனச் சொல்லுகிறார்.

ஒரு குடும்பத்தில் எவ்வித புத்திரனாற் பிதாவுக்கு ஹிதம் உண்டாகுமெனில்; அடியிற்கண்ட பஞ்சதந்திரமென்ற கிரந்தத்திலுள்ள சுலோகத்தைக்கொண்டு படித்த புத்திரனால் மாத்திரம் உளதாமென்று விளங்குகின்றது.

அஜாதம்ருதமூர்க்காணாம் வரமாத்யௌ ந சாந்திம:।
ஸக்ருத்து:க்கராவாத்யௌ அந்திமஸ்து பதே பதே ॥

பிறக்காதவன், இறந்த புத்திரன், படிப்பின்மையால் துஷ்டகாரியங்களைச் செய்யும் மூடபுத்திரன் இவர்களுள், பிறக்காதவனும் இறந்தவனும் மிகவும் சிரேஷ்டமான புத்திரர்கள்; அவர்களாற் பிதாவுக்கு அதிக துக்கமில்லை. எங்ஙனமெனில், பிள்ளை பிறக்கவில்லையென்று பிதாவுக்குத் துக்கம் சிறிதுகாலந்தானிருக்கும்; அதன்பின், நாம் நல்ல கன்மத்தை முன் ஜன்மத்தில் செய்யவில்லை; இந்த ஜன்மத்திலாவது நற்காரியங்களைச் செய்வோமென்று தர்மங்களை ஆதரிக்கத் தொடங்குவதால் அந்தத் துக்கம் நீங்கும். இறந்த பிள்ளையைப் பற்றிய சோகமும் அவ்விதமே. போனஜன்மத்தில் அதிக புண்ணியத்தைச் செய்யாததால் அற்பாயுள் உள்ள புத்திரனை அடைந்தோம். இந்த ஜன்மத்திலாவது தீர்க்காயுஸ் உள்ள புத்திரனை அடைவோமென்று அதற்குத் தகுந்த செய்கைகளைக் கவனிப்பதால் இறந்த பிள்ளையாலேற்பட்ட துக்கம் நீங்கும். ஆனால், படிப்பற்ற மூடனும் மூர்க்கனுமுள்ள புத்திரனால் உண்டான துக்கம் அந்தப் பிதாவை அந்த ஜன்ம முழுவதிலும் விட்டகலாது. ஏனெனில், அந்த மூடன் இறக்காமலும், படிக்காமலும், கெட்டசகவாசங்களை நீக்காமலும் இருந்தால் அவனுடைய பிதா அவைகளை அனுபவித்தேதீரவேண்டும்.

ஆகையால், நன்றாகப் படித்து அதன்படி நடக்கக்கூடிய புத்திரனால்தான் பிதாவுக்குத் துன்பங்கள் உண்டாகாவாம். புத்திரன் என்னும் பதத்திற்கு,

𑌪𑍁𑌨𑍍𑌨𑌾𑌮𑍍𑌨𑍋 𑌨𑌰𑌕𑌾𑌤𑍍𑌤𑍍𑌰𑌾𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌪𑍁𑌤𑍍𑌰𑌃।

புத் என்னும் நரகத்தினின்றும் பெற்றோர்களைக் காப்பாற்றுகிறவன் என்று பொருள். ஆனால் இக்காலத்திய புத்திரர்களோ தன் பெற்றோர்களை மீளா நரகத்தில் அமிழ்ந்துபோகச் செய்கின்றனர். அதற்கு முக்கிய காரணம் படிப்பின்மையே. ஆகையால், பிள்ளைகளை நன்றாகப் படிக்கவைக்கவேண்டிய கடமை பிதாவினுடையதே. பொதுவாகப் படிப்பு எல்லோருக்கும் அவசியமே. ஆயினும் சிவாசார்யமரபிலுதித்தோர்க்கு அத்யாவசியமானது. முற்காலத்தில் அநேகம் ஆதிசைவர்கள் நன்றாகப் படித்து பல ஆகம சாஸ்திரங்களின் நுட்பங்களையுணர்ந்து தாங்களும் பல கிரந்தங்களை இயற்றி இருக்கின்றனர். அதற்கு மூலகாரணம் வித்தையே. ஆனால், இக்காலத்திய சிவாசாரிய குமாரர்களோ இளம்வயதிற் படிப்பிலே கவனத்தைச் செலுத்தாமல், பணத்தைச் சேகரிப்பதில் ஆசைகொண்டு, அதற்காக ஏதோ சில ஆதாரங்களைத் தெரிந்துகொண்டு கோவிலுக்குச் சென்றுவிடுகின்றனர். அவர்களுடைய பிதாமாரும் ஏழ்மையாலோ பணத்தாசையாலோ பிள்ளைகளைப் படிக்கப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புங்கால் வீதியில் கார் முதலிய வாகனங்களாலறைபட்டிறந்துவிடுவர் என்ற துர்எண்ணத்தாலோ படிப்பு விஷயமாக அவர்களைக் கண்டிப்பதில்லை. பிள்ளைகளும் கொஞ்சம் பணம் சம்பாதித்துக்கொண்டு சகவாசதோஷத்தால் பல தீயவழிகளில் அவைகளைச் செலவிட்டுத் தாமும் கெட்டழிகின்றனர். ஆகையால், பெரியோர்களான சிவாசாரியர்கள் தங்கள் குழந்தைகளை நன்றாக வாசிக்கும்படி செய்யவேண்டும். சிவபூஜையின் கிரமத்தை அறியாமலிருக்கும் காலத்தில் அவர்களைப் பூஜை முதலான காரியங்களுக்கு அனுப்புதல் தகாத காரியம். ஆனால் சில பெரியோர்களுடைய மனத்தில் பையன்களுக்குப் புத்தியில்லையா? அவரவர்கள் சுயபுத்தியைக்கொண்டு நல்லது கெட்டது என்பதைத் தெரிந்துகொள்ளட்டுமே என்ற வினா எழலாம்.

உதாரணமாக வைரக்கற்கள் பூமியிலிருந்து எடுக்குங்காலத்தில் எவ்விதமிருந்ததோ அவ்விதமேயிருக்கும்பொழுது பிர

காசம் அவைகளுக்கு ஏற்படவில்லையே. அந்த வைரக்கற்களை நல்ல சாணைகளிற் கொடுத்துப் பட்டைமுதலானவைகளைப் போடச்செய்து பார்த்தால் அதிலுள்ள பிரகாசம் நன்ருகத் தெரியும். ரத்தினம் முதலான வஸ்துக்களுக்கு மொந்தாகார மான உருக்கள் அழிந்து சிறிய உரு ஏற்பட்டால்தான் அவை கள் பிரகாசிக்கும். இவைகள் குறைவால் சோபிக்கக்கூடியது என்பது மணிஸாணோ என்னும் குவலயானந்த அலங்கார கிரந்தத்திலுள்ள சுலோகத்தால் தெரியவருகிறது.

சாணையிலுரைக்கப்பட்டுச் சிறிய உருவையடைந்த ரத்னமும், யுத்தத்தில் கத்தி முதலான ஆயுதங்களால் அடிபட்டு ஜெயித்த அரசனும், மதம்பிடித்ததால் பாகனுடைய உபத்திர வங்கட்கு ஆளாகி இளைத்த யானையும், வெய்யிற்காலத்தில் வற்றிப்போய் இரண்டுபக்கங்களிலேயும் கருமையான மணலிருக்க நடுவில் மாத்திரம் சிறிதாக ஓடும் ஜலமுடைய நதியும், அதிக மான கலைகளற்ற சந்திரனும், சம்போகத்தால் களைப்படைந்த யௌவனஸ்திரீயும், ஐசுவர்யங்களை யாசகர்களுக்குச் செலவிட்டு உண்ண ஊணின்றி உடுக்க ஆடையின்றிக் கஷ்டத்தையும் சகித்துக்கொண்டிருக்கும் அரசர்களும் தங்கள் தங்கள் குறைவால் விளங்குகிருர்கள்.

வைரம் சாணையிற் கொடுத்தவுடன் எவ்விதம் பிரகாசிக்கிறதோ அவ்விதம் தந்தையர்கள் சாஸ்திரங்களை நன்ருகக் கற்றுணர்ந்து அதன்படி ஆதரித்து வருகின்ற ஆசாரியர்கள் என்ற சாணைக்காரர்களிடம் சிறுவர்களை ஒப்புவித்து, அர்களுடைய புத்தி என்னும் சிங்கப்பூர் வைரக்கமலத்தை ஆகமசாஸ்திரங்களென்னும் சாணைகளில் கொடுத்துத் திட்டச்சொல்லி, தீக்ஷண்யத்தை அடையும்படி செய்யவேண்டும். அதன்பின் பகுத்தறிவென்னும் பிரகாசம் ஏற்படும். அதன்பின் அவர்களுக்கு நல்லது கெட்டவற்றை அறியக்கூடிய சக்தி ஏற்படும். இல்லையேல், ரத்தினத்தைக் கெட்டசாணையில் பிடித்தால் எவ்விதம் உருப்படிக்கே மோசம் உண்டாகுமோ அவ்விதம் துஷ்டர்களால் புத்திரர்களுடைய புத்தி என்னும் வைரக்கமலம் "நாவல்கள்" என்னும் கெட்டசாணைகளில் திட்டப்பட்டுக் கெடுதலுறும். அதனுல் அவர்களும் கெடுவார்கள். ஆகையால் சிவாசார்யக்குழந்தைகளுக்குப் படிப்புத்தான் முக்கியமானது. அதற்காக ஒவ்வொரு

ஆதிசைவரும் தங்கள் தேவஸ்தானத்தின் தர்மகர்த்தாவிடமோ டிரஸ்டியிடமோ முறையிட்டு ஆகமசாஸ்திரங்களைப் படிக்க வித்தியாலயங்களை நிறுவச்செய்யவேண்டும். இக்கலிகாலத்தில் சைவமதத்தை நசிக்கும்படி செய்யப் பல நாஸ்திகர்கள் பல சங்கங்களையும், பல நாஸ்திக மதங்களையு மேற்படுத்திக்கொண்டு முயற்சித்து வருகின்றனர். ஒருபாகத்தை நசிக்கவும் செய்துவிட்டனர். ஆகையால், நம்முடைய சைவமதம் எங்கும் நிரங்குசமாகப் பரவவேண்டும். அதற்கு எல்லோரும் ஆகம சாஸ்திரங்களின் நுட்பங்களை யறிந்து மற்றவர்களுக்கும் உபதேசிக்கவேண்டும். குழந்தைகளை முக்கியமாகப் படிக்கவைக்கவேண்டும். சைவமதம் பரவப் பல சங்கங்களை யேற்படுத்தவேண்டும். அதில் எல்லோரும் சாஸ்திரங்களை உபந்நியசிக்கவேண்டும். சைவமதத்தை ஸ்தாபிக்க சிவாசார்யமரபிலுதித்த அச்சவேலி ச. குமாரசுவாமிக்குருக்கள் என்னும் முதியோர் சைவசாஸ்திரபரிபாலனமென்னும் பத்திரிகையை நடத்திவருகின்றார். அவரும் அவருடைய பத்திரிகையும் நீடூழிவாழும்படியாகச் சர்வேஸ்வரனைப் பிரார்த்திக்கவேண்டும். சந்தாதாரர்களும் சந்தாத்தொகையைத் தாமதியாம லனுப்புவது நலம். விஷபதானமும் செய்யவேண்டுமென்றும் பிரார்த்தித்துக்கொள்கிறேன். சைவமதம் நம்பாரத நாட்டில் தடைகளின்றிப் பரவுதற்குச் சிவாசார்யரவர்கள் அதிக முயற்சியெடுத்துக்கொள்ளவேண்டும். ஆகையால் "சிவசாரிய குழாங்களே எழுமின்! வித்தையை உணருமின்!" எனப்பிரார்த்தித்துக்கொண்டு என் சிற்றுரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

---

## ஓர் வினா

நாளது விக்கிரமவருஷ தைமீ 28-ந் தேதி திங்கட்கிழமை புனர்பூசம் 2–14 மேல் பூசமும், 29-ந் தேதி செவ்வாய்க்கிழமை 2–6 வரை பூசநக்ஷத்திரமும் பஞ்சாங்கங்களில் போடப்பட்டிருப்பதால், முருகப்பிரான் ஆலயங்களில் ரதாரோகணமும் முற்கூறிய இரண்டுநாட்களில் எந்த நாளில் செய்வது சாஸ்திரசம்மதமென்பதை இதைக் கண்ணுறும் ஆகமசாஸ்திர பண்டிதர்கள் காலதாமசமின்றி உண்மையை உரைக்கும் நம் சைவசாஸ்திர பரிபாலன வாயிலாக வெளியிட வேண்டுகிறேன்.

ஓர் தென்னிந்திய சந்தேகி.

---

# மதிப்புரை

## தருமபுர ஆதீன இலவச வெளியீடுகள்

### முத்திநிச்சய மூலமும், சிற்றுரையும்

முத்திநிச்சய மூலம் இயற்றியருளினர் திருக்கைலாச பரம்பரைத் தருமபுர ஆதீன முதற்குரவராகிய ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகசுவாமிகள். சிற்றுரை எழுதியவர், சிவப்பிரகாசசுவாமிகளுக்குப் பேரிலக்கணம் கற்பித்த போதகாசிரியராகிய வெள்ளியம்பலவாணத்தம்பிரான் அவர்கள். இவை தருமபுர ஆதீனம் உச-வது மஹாசந்நிதானம் ஷண்முகதேசிக பரமாசாரியசுவாமிகளின் ஆஞ்ஞைப்படி, ஷை ஆதீன வித்துவான் திரு. ப. மு. சோமசுந்தரம்பிள்ளை செய்த ஆங்கில மொழிபெயர்ப்புடன் ஷை ஆதீன வித்துவசிகாமணியாயிருந்த சுவாமிநாதபண்டிதரவர்களாற் பதிப்பிக்கப்பட்டன.

### சிவபோகசாரமும் சொக்கநாதவெண்பாவும்

இவையும் குருஞானசம்பந்தசுவாமிகளால் அருளிச்செய்யப்பட்டன. ஸ்ரீ ஷண்முகதேசிகபரமாசாரிய சுவாமிகள் ஆஞ்ஞைப்படி மைசூர் சமஸ்தானம் டிஸ்டிறிக்ட் எஜுகேஷனல் ஆபீசர் வித்துவான் ப. மு. சோமசுந்தரம்பிள்ளை M. A. L T. அவர்கள் எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்புடன் தருமை ஆதீன வித்துவசிகாமணி ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்களாற் பார்வையிடப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டன. குருஞானசம்பந்தசுவாமிகள் சரித்திரமும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

### சிதம்பரநாதமுனிவர் அருளிய திருப்பதிகமும், அந்தகக்கவி வீரராகவமுதலியார் இயற்றிய பஞ்சரத்தினமும்

திருப்பதிகம் தருமை ஆதீனத்து 10-வது குருமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த சிவஞானதேசிகசுவாமிகள் மேலது. பஞ்சரத்தினம் அழகியசிற்றம்பலதேசிகசுவாமிகள் மேலது.

### சிதம்பரச் செய்யுட்கோவை

இது குமரகுருபரசுவாமிகள் இயற்றியது. ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிகஞானசம்பந்த சுவாமிகள் கட்டளையிட்டருளியவண்ணம் வைத்தீசுவரன்கோயில் ம-௱-௱-ஸ்ரீ வித்துவான் மு. ஷண்முகதேசிகரவர்கள் எழுதிய குறிப்புரையுடன் ஸ்ரீமத் முத்துத்தாண்டவராயபிள்ளையவர்களாற் பார்வையிடப்பெற்றுப் பதிப்பிக்கப்பட்டது. குமரகுருஸ்வாமிகள் சரித்திரச்சுருக்கமும் காலஆராய்ச்சியும் அடங்கியது.

## தமிழாகரமுனிவர் இயற்றிய ஞானசம்பந்தகுருராய அட்டகமும், சந்திரகலாமாலையும்

23-வது மஹாசன்னிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி ஸ்ரீகாழி வித்வான் ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளையாற் பதிப்பிக்கப்பட்டது. தமிழ்ச் சைவாசௌசதீபிகை இயற்றியவரும் இம் முனிவரரே.

## ஞானசம்பந்தகுரு தசமணிமாலை

தருமை ஆதீனத்துப் பிரதமாசாரியர்மீது மதுரைச்சிற்றம்பலவழகிய தேசிகர் இயற்றியது. சிறந்த பொருளடங்கிய தோத்திரநூல்.

## திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல்

தருமை ஆதீன ஆதிகுருமூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர் அருளியது. தசகாரிய நூல்கள் எல்லாவற்றிலும் சிறந்தது. ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள் ஆஞ்ஞைப்படி ஸ்ரீமத் சட்டைநாதத்தம்பிரான் மேற்பார்வையில் அச்சிடப்பட்டது.

## உமாபதிதேவநாயனர் அருளிய ஞானசாரசாஸ்திர பஞ்சகம் என்னும் ஞானசரிதை

இது தருமை ஆதீனத்துப் பண்டாரசாத்திரங்களுள் ஒன்று. ஞானபூசாகரணம், ஞானபூசை, ஞானதீட்சை, ஞானநித்தியேட்டி, போசனவிதி என்றும் ஐந்து பிரிவினது. ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிகஞானசாரிய சுவாமிகள் ஆஞ்ஞாப்பிரகாரம் ஷை ஆதீன அடியார் குழாத்துள் ஒருவராகிய வித்வான் சட்டைநாதத்தம்பிரான் அவர்கள் எழுதிய குறிப்புரையுடன் முத்துத்தாண்டவராயபிள்ளையவர்களாற் பதிப்பிக்கப்பட்டது. இச் சிறந்த நூலுக்கு அநுபந்தமாக வாதுளாகம ஞானபூசாவிதிப்படலமும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

## ஞானசம்பந்ததேசிகர் சமுகமாலை, தாலாட்டு, திருப்பள்ளியெழுச்சி

இவை தருமை ஆதீனத்தை ஆதிக்கண் சிறீஇய குருமூர்த்திகள் மீது வித்துவசிகாமணி வெள்ளியம்பலவாணமுனிவரால் இயற்றப்பட்டன. ஷை ஆதீன அடியார்குழாத்துள் ஒருவரும் திருப்பனந்தாள் காசிமட ஆதீனகர்த்தருமாகிய காசிவாசி சொக்கலிங்கசுவாமிகள் மாணாக்கருமாகிய சாகலிங்கத்தம்பிரான் சுவாமிகளாற் பதிப்பிக்கப்பட்டன.

## திருத்துருத்திப் புராணம்

இது மஹாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களால் இயற்றப்பட்டது. திருத்துருத்தி என்பது குத்தாலம் என வழங்கும். இது மாயவரமிருந்து கும்பகோணம் செல்லும் மார்க்கத்தில் உள்ள றெயில்வே ஸ்டேஷன். தருமை ஆதீனத்துக்குச் சொந்தமானது. இத் தலபுராணம் குத்தாலம் போர்ட் உயர்தரக் கலாசாலைத் தலைமைப் பண்டிதர் ஸ்ரீமான் சிங்காரவேற்பிள்ளை அவர்கள் எழுதிய உரைநடைக் குறிப்புரையுடன் அச்சிடப்பட்டது.

## நித்தியகன்மநெறி

இது தருமை ஆதீனத்து 10வது குருமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீ சிவஞானதேசிகசுவாமிகளிடம் அநுக்கிரகம் பெற்ற ஸ்ரீ சிதம்பரநாதமுனிவர் இயற்றியது. கடுஞ்சொற் பிரயோகமின்றிப் பத்ததிகளை ஆராய்ந்து தமிழிலே குறட்பாவால் ஆக்கப்பட்டது. தியான விதிமுதற் போசனவிதி ஈருகிய கூ பகுப்புக்களைக்கொண்ட அரிய நூல்.

## சிவப்பிரகாசக்கட்டளை

இது புன்கூர்ச் சிவப்பிரகாசர் இயற்றியது. முத்துத்தாண்டவராய பிள்ளை என்னும் வித்துவசிரோமணியாற் பார்வையிடப்பட்டு, ஸ்ரீ சிவ குருநாதத்தம்பிரான் சுவாமிகளாற் பதிப்பிக்கப்பட்டது. ஆங்கில மொழிபெயர்ப்போடு கூடியது.

## சிவானந்தபோதசாரம்

இது தருமை ஆதீனத்துச் சிவானந்தமுனிவர் இயற்றியருளியது. இது தசகாரியம் என்னும் பத்து அவதாரத்தையும் முப்பதவதாரத்துள் வைத்துச் சிவபோகத்தை விளக்குவது. 23-வது குருமூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி ஸ்ரீமத் முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்களாற் பார்வையிட்டு எழுதிய முன்னுரையுடன் சேர்ந்தது.

## இந்துமத பாலபாடம்

இது நாகர்கோயில் திருவாளர் K ஆறுமுகம்பிள்ளை அவர்களால் எழுதப்பட்டு, ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிகசுவாமிகள் ஆஞ்ஞைப்படி தருமை ஆதீன வித்துவான் காழி: சிவ. கண்ணுசாமிப்பிள்ளை அவர்களாற் பார்வையிடப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டது. கடவுளிலக்கணம், ஆலயபூசை விளக்கம், சமயச்சின்னம், விழாக்களின் தத்துவார்த்தம், நித்தியகருமம் முதலிய விஷயங்களை வினவிடை மூலமாக விளக்கும் வசனகிரந்தம்.

## சோடசபிராசாதசட்கம் மூலமும், பழைய உரையும்

இது ஸ்ரீமத் குருஞானசம்பந்தசுவாமிகள் அருளியது. ஸ்ரீலஸ்ரீ மஹாசன்னிதானம் ஸ்ரீமத் சுப்பிரமணியதேசிகசுவாமிகள் ஆஞ்ஞைப்படி வைத்தீசுவரன்கோயில் திரு. சோமசுந்தரதேசிகர் எழுதிய முன்னுரையுடன் வித்வாத்தினம் ஸ்ரீமத் முத்துத்தாண்டவராயபிள்ளையாற் பதிப்பிக்கப்பட்டது.

## பண்டாரமும்மணிக்கோவை

இது குமரகுருபரசுவாமிகள் இயற்றியது. தருமை ஆதீனத்து மாசிலாமணிதேசிகர்மீது செய்யப்பட்ட தோத்திரநூல். சைவசித்தாந்த நன்பொருள்கள் எல்லாம் விளக்கப்பட்டுள்ளது. இது ஸ்ரீமத் சட்டைநாதத்தம்பிரான் எழுதிய குறிப்புரையுடன் திருவாதி தேவஸ்தானம் கட்டளைவிசாரணை ஸ்ரீமத் அருணந்தித்தம்பிரான் அவர்களாற் பதிப்பிக்கப்பட்டது.

## அறிவானந்த சமுத்திரம்

இது அம்பர்மாகாளத்துச் சுவர்க்கபுர ஆதீனத்து அழகியசிற்றம்பல தேசிகர் அருளிய வைதிக சைவசித்தாந்த தோத்திரநூல். சீகாழி வித்வத் ஸ்ரீ S. சதாசிவமுதலியார் அவர்களாற் பிரகடனஞ் செய்யப்பட்டது.

## வைத்தீசுரன்கோயில் என்னும் புள்ளிருக்குவேளூர் புராணம்

இது ஷெ புராண வசனத்துடன், புள்ளிருக்குவேளூர்த் தேவாரம், திருப்புகழ், முத்துக்குமாரசுவாமி திருவருட்பா முதலியவற்றுடன் வைத்தீசுரன்கோயில் ஸ்ரீமத் ச. ச. சோமசுந்தரதேசிகராற் பதிப்பிக்கப்பட்டது.

## சீகாழி சட்டநாதசுவாமி தேவத்தானத்தில் நடைபெறும் திருமுலைப்பாற் சிறப்பு

சீகாழித்தலத்தில் ஆண்டுதோறும் சித்திரைத் திருவாதிரையன்று திருமுலைப்பால் உற்சவம் நடைபெற்றுவருகின்றது. இதனைத் தரிசிப்போர் இதன் வரலாற்றை அறிந்துகொள்ளும்படி வித்துவான் ஸ்ரீமத் சுந்தரேச ஆச்சாரியர் அவர்களால் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக மகாசந்நிதானம் கட்டளையிட்டருளியபடி எழுதப்பட்டது.

## திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிய திருவோத்தூர்த் தேவாரமும், சிற்றுரையும்

இது காஞ்சி ஸ்ரீநிவாசமுதலியாரால் முன்னுரைகாரரை மறுத்து எழுதப்பட்டது. திருக்கடைக்காப்புப் பாக்கள் சுவாமிகளாற் பாடப்பட்டன அல்ல என்கிறார் உரைக்குறிப்பில். இதன் விலை அணா 4.

## திருஅன்னியூர்ச் சிலாசாசன ஆராய்ச்சி

அன்னூர் என்று இப்பொழுது வழங்கும் ஊர் முன் அன்னியூர் என்றும், அதற்குமுன் மன்னியூர் என்றும் வழங்கிவந்தமையும், இவ்வூரில் இருக்கும் சிவாலயம் மிகப் பழமைவாய்ந்ததென்பதும், ஆங்குப் பொறிக்கப்பட்டுள்ள சிலாசாசனங்கள் பெரும்பான்மை கொங்குசோழர் காலத்து, கி. பி. 1000 முதல் மூன்று நூற்றாண்டுகள் வரை பரவியிருந்தன என்பதும், பிறவும் இந்தநூலால் அறியத்தக்கன. ஷெ கல்வெட்டுக்களை ஆராய்ந்து அவற்றாற் கிடைத்த பல செய்திகளின் கருத்துக்களே இந்த நூலிற் கூறிக்கப்பட்டுள்ளன.

## திருமுட்ட ஸ்ரீ நித்தீசுவராலய சிலாசாசன ஆராய்ச்சி

ஸ்ரீமுஷ்ணம் என்று இப்பொழுது வழங்கும் ஊர் முன் திருமுட்டம என வழங்கிவந்தது. இத்தலத்தில் சிவாலயம் ஒன்றும், பெருமாள்கோயில் ஒன்றும் உண்டு. இரண்டு ஆலயங்களிலும் இதுவரை பரிசோதிக்கப்பட்ட கல்வெட்டுகள் எழுபதின் மிக்கன. அவற்றை ஆராய்ந்து கிடைத்த பல செய்திகளைக் கொண்டு இவ்வாராய்ச்சி எழுதப்பட்டுளது. இவ்விரு நூல்களாலும் பண்டைக்காலத்து அரசர்களும், பெரியோர்களும் சிற்பசாஸ்திர முறைப்படி ஆலயங்களை நிருமித்து, நித்தியபூசையும், விழாக்களும் செய்வித்தமை, திருப்பணி முதலியன நடத்தற்குத் தானம் செய்தமை, கோயிற்பொருள் பண்டாரங்களிற் பாதுகாக்கப்பட்டுவந்தமை முதலிய செய்திகள் அறிந்துகொள்ளலாம். ஆராய்ச்சிக் களஞ்சியமாகிய இவ்விரு நூல்களையும் இயற்றினார் சிலாசாசன ஆராய்ச்சி வல்லுநரும், வழக்கறிஞரும், சைவப்பிரசாரகரும், இருமொழி வல்லுநரும், ஆகிய வி. எம். இராமச்சந்திரம் செட்டியார் B. A., B. L., F. R. G. S. அவர்களாவர். இவர்கள் கலைமகளாதியாம் பத்திரிகைகளிலும் அநேக அரிய கட்டுரைகளை எழுதிவருகின்றமை தமிழுலகம் அறிந்ததொன்றாம். திரு செட்டியாரவர்கள் சேவைக்குப் பிரதியுபகாரம் காண்கின்றிலம். அவர்கள் இதுபோன்ற வேறும் பல நூல்களை எழுதி உபகரிக்குமாறும், சைவநலமும், தமிழ்நலமும் செறிந்த பத்திரிகைகட்கு விஷயதானம் செய்துகொண்டு வருமாறும் ஸ்ரீ சிவபெருமானைப் பிரார்த்திக்கின்றோம்.

## சிவநேசன்

இது சைவாபிமானியும் திருப்பணிச்செல்வருமாகிய மகாராஜ ராஜஸ்ரீ ராம. கு. இராமசாமிச்செட்டியார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் சிறந்த செந்தமிழ்த் திங்கள் வெளியீடு. நாத்திக அந்தகாரம் பாவவொட்டாது ஆத்திகவொளி பரப்பி, பண்டைப் பெருநெறியிற் சிறிதேனும் பிறழாது செந்தமிழும் சைவமுந் தழைத்தினிது ஓங்கச் சிறந்த அறிஞர்களால் எழுதப்படும் அரிய கட்டுரைகளைத் தாங்கிப் பதினைந்கு ஆண்டுகளாகப் பெருந்தொண்டாற்றிவருகின்றது. கிடைக்குமிடம்: ஆசிரியர், சிவநேசன் காரியாலயம், திட்டை S. I. R.

## நடராஜ ஸ்தவ ரத்நமாலா,
## விசுவநாதாஷ்டகம்,
## விசாலாக்ஷி பஞ்சரத்நம்

இவை சுன்னாகம் பிராசீனபாடசாலைத் தலைமைஆசிரியராயிருந்த பிரமஸ்ரீ பி. வி. சிதம்பரசாஸ்திரிகள் அவர்களால் வடமொழியில் பக்திரசம் ததும்ப இயற்றப்பட்டு, மயிலணி விசுவநாதேசுரர் திருவூஞ்சலுடன் ஷெ கோயில் பிரமஸ்ரீ ச. சதாசிவக்குருக்கள் அவர்களால் பிரசுரிக்கப்பட்டது. நடராஜஸ்தவரத்னமாலை ஷெ சாஸ்திரிகள் எழுதிய தமிழுரையுடன் கூடியது. எத்தனையோ மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லிவைத்துப் பண்டிதர்களாக்கிவைத்த சாஸ்திரிகளதும் குருக்கள் அவர்களதும் முயற்சி பாராட்டத்தக்கது. விலை சதம் 10. பிரதிகள் சிவஸ்ரீ ச. சதாசிவக்குருக்கள், மயிலணி விசுவநாதசுவாமிகோயில், சுன்னாகம் என்ற விலாசத்துக்கெழுதிப் பெறற்பாலன.

## தேவிதோத்திரமஞ்சரி

இதில் ஸ்ரீமத்மாத்ருகா புஷ்பமாலாஸ்தவம், கௌரீசதகம், ஸ்ரீராஜராஜேஸ்வரி அஷ்டகம் என்பவற்றின் வடமொழி மூலமும், திரிபாஷாபண்டிதரென்றும், வைதிகசைவசீலரென்றும், தமிழ்வீரகர் என்றும் நமது நாட்டிற் புகழ்ந்து கூறப்படும் வித்தியாதரிசி: பிரமஸ்ரீ தி. சதாசிவஐயர் அவர்கள் இயற்றிய தமிழ் உரையும், தமிழ் மொழி பெயர்ப்புச் செய்யுளும் சேரப்பெற்றுள்ளது. இப் புத்தகம் சப்ஸ்கிருத பாஷாஞானமுடையவர்களும், தமிழ்மொழி மாத்திரம் பயின்றவர்களும் இருமொழியிலும் வல்லுநரும் ஆகிய எல்லோருக்கும் பயன்படுமுறையில் இனிதமைந்திருக்கிறது. இத் தோத்திரங்களைப் பாராயணம் செய்துகொண்டுவருவோர் ஜகன்மாதாவாகிய தேவியின் திருவருளுக்குப் பாத்திரராவர். இத் தோத்திரமஞ்சரி மொழிபெயர்ப்புச் செய்வோருக்கு ஓர் வழிகாட்டியாகும். இது கிடைக்குமிடம்: ச. முத்துச்சாமி ஐயர், அளவெட்டி, சுன்னாகம் போஸ்ட், இலங்கை. (இதன் விலை அணா 6.)

## சிவநாமாவளித்திரட்டு

இந்நாட்டில் அன்பர்களாயுள்ளோர் சுவாமி சந்நிதானத்திலும், சுவாமி வீதிப்பிரதக்ஷிணம் செய்யும்போதும் சிவநாமபாராயணம் செய்து வருவர். அவர்கட்குப் பெரிதும் உபயோகமாதற்பொருட்டு விநாயகர், நடராஜர், அம்பிகை, முருகக்கடவுள் முதலிய மூர்த்திகட்குரிய நாமாவளிகள் இந்த நூலிற் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றைத் தொகுத்துப் பிரசுரம் செய்தவர்கள் நீர்வேலிச் சைவ இளைஞர் சங்கத்தினராவர். சைவ நன்மக்கள் ஒவ்வொருவரும் இதனை விலை கொடுத்துப் பெற்று, இளைஞர் சங்கத்தை ஊக்கப்படுத்துவதோடு, தாமும் பாராயணஞ்செய்து இன்புறுவார்களாக. விலை சதம் 10.

கிடைக்குமிடங்கள்:—சி. க. வேலாயுதபிள்ளை சைவஇளைஞர் சங்கக் காரியதரிசி, நீர்வேலி; மு. மயில்வாகனம் காரியதரிசி, சைவஇளைஞர் மத்தியமகாசபை, இந்துக்கல்லூரி, யாழ்ப்பாணம்.

———